# THE MADURA-RAMNAD DIOCESAN MAGAZINE

## SATHIAVARTHAMANI

**FEBRUARY, 1954**




# மதுரை-ராமநாதபுரம்

# அத்தியட்சாதீனத் தீபிகை

## சத்தியவர்த்தமானி

பெப்ரவரி, 1954

---

## மதுரை-ராமநாதபுரம் அத்தியட்சாதீனத் தீபிகை


**பத்திராதிபர் :—** A. சாமுவேல் ஐயர், செமினரி, பசுமலை.

**உதவி பத்திராதிபர் :—** C. S. தவமணி ஐயர், மண்டபம் கேம்ப்.

**மானேஜர் :—** கனம் ஜாஷ்வா அவர்கள், மதுரை-ராமநாதபுரம்,
அத்தியட்சாதீன பொக்கிஷதார்,
211 தெற்கு மாரட் வீதி, மதுரை.

**பத்திரிகைக் கமிற்றி :—**

கனம் பிரடரிக் ஜேக்கப், மதுரை.
„ தேவப்பிரகாசம் ஐயர், திண்டுக்கல்.
„ தவமணி ஐயர், மண்டபம் கேம்ப்.
„ ஜாஷ்வா, அத்தியட்சாதீன பொக்கிஷதார்.
„ A. சாமுவேல் ஐயர், பசுமலை. (தலைவர்.)


### முக்கிய பொருளடக்கம்.




தென் இந்திய சபையைச் சேர்ந்த
மதுரை—இராமநாதபுரம் அத்தியட்சாதீனத்தின்

# சத்திய வர்த்தமானி

புஸ்தகம் XV பசுமலை, பெப்ருவரி 1954 இலக்கம் 4

வருடசந்தா : 1 ரூ. 8 அணா. தபாற்கூலி உட்பட.




## அத்தியட்சரின் கடிதம்

தல்லாகுளம்,
மதுரை,
ஜனுவரி 28, 1954.

கிறிஸ்துவுக்குள் அன்புள்ள மக்களே,

இந்த மாதத்தில் தென்னிந்திய திருச்சபையின் 4வது ஸினடு சென்னையில் நடைபெற்றது. கடந்த இரண்டு ஆண்டுகளில் திருச்சபை பல வழிகளில் முன்னேறியுள்ளதென்பது தெற்றன புலப்பட்டது. மாறிக்கொண்டு வருகிற உலகத்திலும், நமது நாட்டிலும், கிராமங்களிலும் திருச்சபையின் வேலையை எப்படிக் காலத்திற்கேற்றவாறு அமைக்கலாம் என்பதே கூட்டத்தின் முக்கிய விஷயம். இவ்விஷயத்தில் 'கிராம சுயேட்சை ஊழியர்களை குருக்களாக அபிஷேகம் செய்ய' அனுமதி கோரிய நமது அத்தியட்சாதீனத்தின் வேண்டுகோள் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆகவே இதை நாம் மிகக் கவலையோடும் ஜெபத்தோடும் பரீட்சித்துப் பார்க்கவேண்டி ஓர் பெரும் உத்திரவாதத்தை நாம் பெற்றுள்ளோம்.

ராயலசீமாவின் அத்தியக்ஷராகிய மகா கனம் ஹாஸ்பட் சுமித்திரா அவர்கள் மாடறேற்றராக தெரிந்தெடுக்கப்பட்டார். தற்சமயம் ஓர் இந்தியர் மாடறேற்றராக இருப்பது நம் எல்லாருக்கும் சந்தோஷம். ஆகவே அவரை நீங்கள் எல்லாரும் உங்கள் இடைவிடா ஊக்கமான ஜெபத்தால் ஆதரிக்கக் கேட்டுக்கொள்ளுகிறேன். சென்னையிலுள்ள கனம் ஆர். டி. பால் அவர்கள் மறுபடியும் காரியதரிசியாகவும், திருவனந்தபுரத்தைச் சேர்ந்த கனம் குணமணி அவர்கள் பொக்கிஷதாராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஸினடின் டெப்புட்டி மாடறேற்றராக என்னை தேர்ந்தெடுத்திருப்பதால், தென்னிந்திய சபையின் பொதுவான வேலையில் அதிக நேரத்தை செலவிடத் தேவையாயிருக்கலாம். அவ்வூழியத்தைச் செய்யச் சக்தியும் வழிநடத்துதலும் கிடைக்கும்படி உங்கள் ஜெபங்கள் தேவை.

வடகேரள அத்தியட்சாதீன சங்கம் தனது அத்தியட்சரைத் தேர்ந்தெடுக்கும்படி மார்ச்சு மீ 3ல் கூடும். இந்த முக்கியமான விஷயத்தில் கடவுள் அந்த சங்கத்திற்கு வழிகாட்டும்படி தனி, பொது ஜெபங்களில் நினைக்கும்படி கேட்கிறேன்.

பெப்ருவரி 14ம்உ ஆஸ்பத்திரி ஓய்வுநாளாக உலகமெங்கும் ஆசரிக்கப்படுகிறது. ஆகவே நமது சபைகளைச் சேர்ந்த யாவரும் அந்நாளை எல்லா கிறிஸ்தவ வைத்தியர்கள், நர்ஸுகள், பிறவைத்திய ஊழியர்களுக்காகவும், விசேஷமாக மதுரை, இராமநாதபுரம், தயாபுரம், கீளாஞ்சுனை, பசுமலை, மண்டவாடி முதலான வைத்திய நிலையங்களுக்காக ஜெபிக்கும் நாளாக ஆசரிப்பீர்கள் என நம்புகிறேன். இவைகள் நமது வைத்திய நிலையங்கள். ஆக ஜெபத்தாலும், நன்கொடைகளாலும் இவைகளைத் தாபரிப்பது நமது கடமை. சுவிசேஷ ஊழியத்தில் பிணியாளிகளை சுகமாக்கும் ஊழியமும் ஓர் முக்கியமான பாகம் என்பதை ஞாபகப்படுத்திக்கொள்வது நமது கடமை. இதை உத்தேசித்து இவ்வருடத்தில் நமது லோக்கல் கவுன்சில்களில் நடக்கும் ஞானபோத ஸ்தாபனக் கூட்டங்களில் ஓர் பாகத்தை நமது கிராமங்கள் சொஸ்தமுள்ளவைகளாகயிருப்பதற்குரிய பயிற்சி அளிக்க திட்டமிட்டிருப்பது எனக்குச் சந்தோஷம்.

அநேக சபைகளில் விசேஷித்த ஸ்தோத்திரப் பண்டிகையை ஆசரிக்க ஆயத்தம் செய்யப்படுகிறது. இந்த வாரம் கோம்பை சபையார் சந்தோஷமாகவும் தாராளமாகவும் தங்கள் காணிக்கைகளைக் கொண்டுவந்த காட்சி எனக்கு சந்தோஷமளித்தது. மற்றவர்களும் அவ்விதமே செய்யின் சபைகளில் உள்ள கடன்கள் கடவுளின் ஒத்தாசையால் முற்றிலும் நீங்கும் எனத் திட்டமாய் நம்புகிறேன்.

ஒவ்வொரு மாதமும் ' இயேசுவின் ஜெபப்பள்ளி' என்ற தலைப்பில் ஏராளமான பிரதிகள் அச்சடிக்கப்படுகிறதென்பதை ஞாபகப்படுத்துகிறேன். உங்கள் ஜெபப் பகுதிகளுக்கும் தனித் தியானத்திற்கும் உங்களுக்குத் தபாலில் வரும் இப்பிரதிகளை உபயோகப்படுத்துங்கள். இவைகள் இயேசுவின் ஜெபப்பள்ளியில் முன்னேற நம் யாவருக்கும் அதிகமாய் உதவும்.

இப்படிக்கு,
கிறிஸ்துவுக்குள் உங்களன்புள்ள ஊழியன்,
**லெஸ்லி நியூபிகின்,**
அத்தியக்ஷர்.

---





## அத்தியக்ஷரின் அலுவல்கள்

| | | |
|---|---|---|
| பெப். | 5 | சென்னை—ஸினடு அலுவல் கூட்டம் |
| | 6 | பனையடிபட்டி—ஸ்தோத்திரப் பண்டிகை |
| | 7 | மதுரை—மிஷன் வேலையில் இல்லாத கிறிஸ்தவர்களின் ஆலோசனைக் கூட்டம் |
| | 9–10 | மதுரை—கமிற்றிகள் |
| | 13—14 | இராமநாதபுரம்—திடப்படுத்தல் ஸ்தோத்திரப் பண்டிகை |
| | 16 | செவல்பட்டி—ஸ்தோத்திரப் பண்டிகை |
| | 19 | மானாமதுரை—ஸ்தோத்திரப்பண்டிகை, திடப்படுத்தல் (புளியன்குளம்) |
| | 21 | உசிலம்பட்டி—ஸ்தோத்திரப்பண்டிகை |
| | 24—25 | திருமறையூர்—வேதக் கல்லூரியின் நிர்வாகக் கூட்டம் |
| | 27 | லேடி டோக் கல்லூரி — " |
| | 28 | பெரியகுளம், திண்டுக்கல்—ஸ்தோத்திரப்பண்டிகை |
| | 29 | கிழக்கு திண்டுக்கல்—ஸ்தோத்திரப்பண்டிகை |
| மார். | 4–6 | நல்லான்செட்டிபட்டி, விருதுநகர், மூன்றடைப்பு ஸ்தோத்திரப்பண்டிகை |
| | 7 | மதுரை—பரி. ஜியார்ஜ் ஆலயம்—திடப்படுத்தல் —வேதாகம சங்க ஜூபிலி |

---

## திருச்சபைச் செய்திகள்.

1. சபையின் திருநாட்கள்.

| | | |
|---|---|---|
| மார்ச்சு | 3 | சாம்பற் புதன்கிழமை. |
| " | 5 | சர்வலோக ஸ்திரீகள் ஜெபநாள். |
| " | 7 | லெந்து ஞாயிறு 1. |
| " | 14 | " " 2. |
| " | 21 | " " 3. |
| " | 25 | மங்களவாக்குத் திருநாள். |
| " | 28 | லெந்து ஞாயிறு 4. |

**2. சர்வலோக ஸ்திரீகள் ஜெபநாள்.**

இது மார்ச்சு மாதம் வெள்ளிக்கிழமை 5ம்உ நடைபெறும். இதன் சம்பந்தமாய் உபயோகிக்கக்கூடிய தமிழ் பிரதிகளை (பெரியோருக்காக 100 பிரதிகள் ரூ. 2-8-0), (சிறுவருக்காக பிரதிகள் 100 ரூ. 0-12-0) கனம் சாண்டிலர் அம்மாள், உட்ஸ்டாக், கொடைக்கானல் என்ற விலாசத்திற்கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

**3. "நாம் ஏன் குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறோம்"?**

என்ற தலைப்புள்ள தென்னிந்திய சபைப் பிரசுரம் ஒன்றை இந்த மாதம் அச்சிடுகிறோம். நமது சபைகளில் ஞானஸ்நானத்தைப் பற்றி பல அபிப்பிராய பேதங்களும், சில சமயங்களில் தப்பறையான போதகங்களும் நடந்து வருவதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். ஞானஸ்நானத்தைப்பற்றி உண்மையான வேத போதனை இன்னதென்று இங்கே காணலாம். இச்சஞ்சிகையில் இது வெளிவருவதோடு பலர் உபயோகத்திற்காக பிரத்தியேகமான 500 பிரதிகள் அச்சிடுகிறோம். இவை தேவையான தேவ ஊழியர் வேண்டிய பிரதிகளைக் கனம் அத்தியட்சரவர்களுக்கெழுதிப் பெற்றுக்கொள்ள வேண்டுகிறோம்.

**4. பசுமலைப் பாடசாலைகளின் வாழ்க்கை ஆரம்ப விழா.**

மார்ச்சு 5—7 வரை பசுமலையிலுள்ள அரங்கசாலையில் நடைபெறும். அச்சமயம் பல பாடசாலைகளிலிருந்து படிப்பை முடித்து வெளியேறிப்போகும் மாணவர் சம்பந்தமாய்ப் பல கூட்டங்கள் நடைபெறும். ஒற்றுமை உணர்ச்சி வளர்ந்தோங்கவும், பழைய நட்பைப் புதுப்பித்துக்கொள்ளவும், படிப்பை முடித்துச் செல்லும் மாணவர்களின் திறமையை அங்கீகரிக்கவும், அவர்களுக்கு அறிவுறுத்தி அன்புவிடை கூறவும் இது நல்ல தருணம். இக்கொண்டாட்டத்திற்கு அன்பர் அனைவரும் வந்திருந்து சிறப்பித்துக் கொடுக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

**5. "இயேசுவின் ஜெபப்பள்ளி"**

என்ற தலைப்புடன் மாதந்தோறும் கட்டுறைகள் வெளிவருகின்றன. இக்கட்டுறைகொண்ட பிரத்தியேகமான பிரதிகளும் எங்களிடமுண்டு. தங்கள் சபைகளில் இவைகளை உபயோகிக்க விரும்பும் தேவ ஊழியர் எங்களுக்கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

**6. 1954—கிராம ஊழியர் பஞ்சாங்கம்.**

ஆராதனை நடத்தும் எல்லா தேவ ஊழியருக்கும் இது மிகவும் உபயோகமாயிருக்கும். எல்லாரும் எளிதில் வாங்கி உபயோகிப்பதற்கேதுவாய் இதன் விலை குறைக்கப்பட்டிருக்கிறது. ஒரு பஞ்சாங்கம் விலை 4 அணா மாத்திரம். சில காப்பிகள் மாத்திரம் கைவசமுள்ளன. ஆக உடனே மதுரை டயோசீஸன் புத்தக டிப்போவிற்குக்கெழுதிப் பெற்றுக்கொள்ளவும்.





**7. கிறிஸ்தவ வாலிபத் தலைவர்கள் மகாநாடு.**

பல காரணங்களையிட்டு இது ஜனுவரியீ திருப்புவனத்தில் நடக்க முடியாததுபற்றி விசனிக்கிறோம். இனிக் கூடும் இடத்தையும் தேதிகளையும்பற்றிக் காலாகாலத்தில் விளம்பரப்படுத்துவோம் என்று அத்தியட்சாதீன இளைஞர் ஊழியர் எழுதுகிறார்.

---

## நாம் ஏன் குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறோம்?

நாம் தேவனால் இயேசு கிறிஸ்துவுக்குள் மீட்கப்படுகிறோம். நம்முடைய கிரியைகளினால், அல்லது நம்முடைய விசுவாசத்தினால், அல்லது நம்முடைய மனமாறுதலினால் நாம் மீட்கப்படாமல், கிறிஸ்துவினாலேயே நாம் மீட்கப்படுகிறோம். அவராலேயே நாம் தேவனோடு ஒப்புரவாக்கப்பட்டோம். "அவரே நம்மை இருளின் அந்தகாரத்தினின்று விடுதலையாக்கி, தமது அன்பின் குமாரனுடைய ராஜ்யத்தில் கொண்டுவந்து சேர்த்தார்." இவ்விதமாய் அந்தகாரத்தினின்று ஒளியின் ராஜ்யத்திற்குள் பிரவேசிக்கிறதற்கு கிறிஸ்துவால் நியமிக்கப்பட்ட பிரத்தியட்சமான அடையாளம், ஞானஸ்நானமே. நாம் கிறிஸ்துவுக்குள் இணைக்கப்பட்டிருக்கிறோம் என்பதற்கு ஞானஸ்நானம் அடையாளமாயிருக்கிறது.

பகுத்தறிவற்ற குழந்தைகளுக்குக் கொடுக்கப்படும் ஞானஸ்நானத்தை, சில கிறிஸ்வர்கள் ஞானஸ்நானம் என்றே நம்புகிறதில்லை. இக்கொள்கையை தென் இந்திய சபை மதிக்கிறது, ஆனால் ஆமோதிக்கிறதில்லை; இச்சபை, குழந்தைகள் ஞானஸ்நானம் உண்மையான ஞானஸ்நானம் என நம்புகிறதினால், குழந்தைகள் ஞானஸ்நானம், ஞானஸ்நானமேயல்ல என பாவித்துநடக்க அதின் அங்கத்தினருக்கு இடம் கொடுப்பதில்லை.

குழந்தைகள் ஞானஸ்நானத்தை நிராகரிப்பது தங்கள் கடமையென மனப்பூர்வமாக எண்ணுவதற்கு சகோதரரான பாப்டிஸ்ட் சபையார் கூறும் (Baptists) காரணங்கள் என்ன என்று கவனிப்போம். அக்காரணங்களை நாம் ஊன்றி ஆராயவேண்டியது அவசியம். நமது மீட்பு தேவனுடைய கிரியை என்று கூறியுள்ளோம். நாம் பாவிகளாயிருக்கையில் நமக்காக மரிக்கும்படி அவர் தமது குமாரனைத் தந்தருளினார். நாம் மீட்கப்படுவதற்கு முதலாவது நாம் முன்வர

வேண்டுமென அவர் காத்துக்கொண்டிராமல் நமது மீட்பை சம்பாதிப்பதில் அவர் நமக்கு முந்திக்கொள்கிறார். என்றபோதிலும் அவருடைய மீட்பை நாம் ஏற்றுக்கொள்ளாவிட்டால் அந்த மீட்பு நம்மில், நம்மையல்லாமல் பலிதப்படுவதில்லை. கிறிஸ்துவின் மரணம் நமக்கு பயன்படவேண்டுமானால், நாம் நம்மை அவருக்கு ஒப்புவித்து, நமது தனிப்பட்ட சுயநல நோக்கங்களைக் கீழ்ப்படுத்தி, நம்மில் அவர் ஜீவிக்க இடம் கொடுக்கவேண்டும். நாம் அவரோடுமரித்து உயிரோடிருக்கவேண்டியவர்கள். புதிய ஏற்பாட்டில் "விசுவாசம்" என்பதின் கருத்து இதுதான். ஆனால் பகுத்தறிவற்ற குழந்தைக்கு இத்தகைய விசுவாசம் இல்லையே, என்றதோர் விவாதம் எழும். மேலும் இந்த விசுவாசமில்லாமல் நாம் கிறிஸ்துவின் உண்மையான அவயவங்களாயிருக்கமுடியாதாகையால் குழந்தைகளுக்கு ஞானஸ்நானம்கொடுக்கிறது தப்பிதம் என்பர். இதற்கு நாம் என்ன பதில் சொல்லுவோம்?

முதலாவது நாம் கவனிக்கவேண்டியது யாதெனில், இவ்விஷயத்தை ஓர் வேத வசனத்தை ஆதாரமாகக் கொண்டு முடிவுகட்ட இயலாதென்பதே. குழந்தை ஞானஸ்நானம்பெற்ற சம்பவம் வேதாகமத்தில் திட்டமாகக் கூறப்படவில்லையென்பது உண்மைதான். (என்றாலும், பின்சொல்லியிருக்கிற பிரகாரம் குழந்தைகளும் ஞானஸ்நானம் பெற்றிருக்கக்கூடிய சந்தர்ப்பங்கள் பல உண்டு.) அங்ஙனமே கிறிஸ்தவப் பெற்றோரின் குழந்தைகள் ஞானஸ்நானம் பெறாமல் வளர்க்கப்பட்ட சம்பவமும் வேதாகமத்தில் காணப்படவில்லை யென்பதுவும் உண்மைதான். இந்த விஷயத்தில் வேத வசனங்களைச் சான்றாகக் கொண்டு எளிதில் ஓர் முடிவுகட்டக் கூடியதாயிருக்குமானால் இந்த விவாதம் கிறிஸ்தவர்களுக்குள் உண்டாயிருக்கமாட்டாது. இந்த விவாதம் ஏற்பட்டதே கிறிஸ்துவுக்குப்பின் மூன்றும் நூற்றாண்டில்தான். இவ்விவாதத்தைக் குறித்து இரு குறிப்புகள் கவனிக்கப்படத்தக்கவை. முதலாவது, குழந்தைகள் ஞானஸ்நானத்தை எதிர்த்தவர்கள் (சரித்திர ஆதாரங்கள் காண்பிக்கும் அளவில்) இதை ஓர் நூதன வழக்கமெனக் குறிப்பிடவில்லை. அப்போஸ்தலர் குழந்தைகளுக்கு ஞாஸ்நானம் கொடுக்கவில்லை யென்றும் சொல்லவில்லை. அப்போஸ்தலர்கள் அங்ஙனம் கொடுக்கவில்லையென்று சொல்லியிருந்தால் இவ்விஷயம் இறுதியான தீர்ப்பை அப்போதே அடைந்திருக்கும். சாத்தியப்பட்டிருந்தால் இக்காரணத்தைக் கையாண்டிருப்பார்கள் என்பது நிச்சயம். இரண்டாவது, குழந்தைகள் ஞானஸ்நானத்தை எதிர்த்தோர் கூறிய காரணம்; ஞானஸ்நானம் பெற்றபின் செய்யப்படும் பாவங்கள் மன்னிக்கப்படமாட்டாதாகையால் அந்திகாலம் வரையும் ஞானஸ்நானம் பெறாமலிருப்பது உசிதம் என்பதே. தற்காலத்தில் குழந்தைகள் ஞானஸ்நானத்தை எதிர்ப்போர் இக்காரணங்களைக் கூறுவதேயில்லை.





மேலும் புதிய ஏற்பாட்டு ஆகமங்களை எழுதினவர்கள், முன் சுவிசேஷத்தையே கேள்விப்படாதவர்களின் மத்தியிலிருந்து புதிதாக கிறிஸ்தவர்களான காலத்தைப் பற்றியே எழுதினர். ஆகையால், இயல்பாய் அவர்களுடைய கவனமும் கருத்தும் சுவிசேஷத்தைக் கேட்டு மனந்திரும்பின முதியோர் ஞானஸ்நானத்தைப் பற்றினதாகவேயிருந்தது. (தற்காலத்திலும் புறதேச சுவிசேஷகர்களுடைய பிரசங்கங்களிலும், நூல்களிலும் இத்தகைய கருத்தையே காணலாம்). இந்நாளிலும் புதிதாக ஞானஸ்நானம் பெற்ற ஓர் சபைக்குப் பிரசங்கம் பண்ணுகிறவர், சபையார் தங்கள் குடும்பங்களோடு ஞானஸ்நானம் பெற்றிருந்தாலும், குழந்தைகளைப் பார்த்தல்ல, முதியோரைப் பார்த்துத் தான் பிரசங்கஞ்செய்வார். எனவே, புதிய ஏற்பாட்டில் ஞானஸ்நானத்தைப்பற்றிச் சொல்லப்பட்டிருப்பது யாவும் முதியோர் ஞானஸ்நானத்தைப்பற்றினதாயிருப்பது இயல்பு. என்றாலும், புதுக் கிறிஸ்தவர்கள் குடும்பங் குடும்பமாக ஞானஸ்நானம் பெற்றபோது அவர்கள் குழந்தைகளுடன் ஞானஸ்நானம் பெற்றிருக்க வேண்டுமென்ற அனுமானம் பொருந்தக்கூடிய பல வேத வசனங்கள் உண்டு. உதாரணமாக: பரி. பேதுரு தமது முதல் பிரசங்கத்தில் "வாக்குத்தத்தமானது உங்களுக்கும் உங்கள் பிள்ளைகளுக்கும்....உண்டாயிருக்கிறது" என்றார். பிலிப்பி பட்டணத்தில் லீதியாளும் "அவள் வீட்டாரும்" ஞானஸ்நானம் பெற்றனர். சிறைச்சாலைக்காரனும் "அவனுடையவர்கள் அனைவரும்" ஞானஸ்நானம் பெற்றார்கள். இச்சம்பவங்களிலிருந்து இயல்பாய் மிகப் பொருத்தமாகத் தோன்றும் கருத்து, முழுக் குடும்பங்கள் ஞானஸ்நானம் பெற்றன என்பதே.

இவை, நாம் கவனிக்கவேண்டியதோர் குறிப்பைச் சுட்டிக்காட்டுகின்றன. அதாவது நாம் தனிப்பட்ட குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுக்காமல் கிறிஸ்தவக் குடும்பத்திலுள்ள குழந்தைகளுக்கே ஞானஸ்நானம் கொடுக்கிறோம் என்பதே. அதேனென்றால் பலர் சேர்ந்திருந்தாலும் குடும்பம் என்பது ஒன்றுதான் என நாம் பாராட்டுகிறோம் முழுக்குடும்பம் ஒன்று சேர்ந்திருக்கிறது எனவே தேவன் முழுக்குடும்பத்தையும் தமது கிருபையின் உடன்படிக்கைக்குள் ஏற்றுக்கொள்ள விரும்புகிறார். அதோடு குடும்பத்திலுள்ள ஒவ்வொருவனும் தன் தன் திராணிக்குத்தக்கதாக விசுவாச ஜீவியத்திலும் கிறிஸ்துவைப்பற்றும் அன்பிலும் வளர வேண்டுமென விரும்புகிறார். முழுக் குடும்பமும் பரிசுத்த குடும்பமாயிருக்க வேண்டும். இந்த விசுவாசம் பரி. பவுலுக்கு அதிகமாயிருந்ததால் ஓர் தகப்பனாவது தாயாவது மனம் திரும்பாமலிருந்து யாதாமொருவர் கிறிஸ்தவராயிருந்தால் முழுக் குடும்பமும் பரிசுத்தமெனக் கருதினர். (1 கொரி. 7 : 14) நமக்கும் இந்த விசுவாசமிருப்பதினாலே, விசுவாசிகளான பெற்றோர் தங்கள் குழந்தைகளை விசுவாசிகளாக வளர்ப்

போம் என்று கூறும்போது நாம் குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறோம்.

இவ்விதமாய் குடும்பம் முழுவதும் தேவனுடைய உடன்படிக்கைக் குள்ளாகி விட்டது. ஏனென்றால் குடும்பத்திலுள்ளோர் பிறப்பதற்கு முன்னரே தேவன், கிறிஸ்துவின் மூலமாய் உலக ரட்சிப்பை நிறைவேற்றிவிட்டார். தேவன் முந்தி நடப்பித்த கிருபையின் கிரியையை ஞானஸ்நானம் அறிவித்து, அக்கிருபையை முழுக் குடும்பத்திற்கும் அருளுகிறது: அப்படியானாலும் மனிதன் கடவுளிடம் திரும்பி அவருடைய கிருபையைப் பெற்றுக்கொள்ளவேண்டிய உத்தரவாதம் அவனுக்கு உண்டே, அதைப்பற்றியென்ன? அந்த உத்தரவாதம் முதியோர் ஞானஸ்நானத்தின்போது, விசுவாசத்தில் திடமாய், முழுமனதுடன், பகிரங்கமாய், கிறிஸ்துவைத் தங்கள் சொந்த ஆண்டவராகவும் இரட்சகராகவும் அவர்கள் ஏற்றுகொண்டது பூரணமாக விளங்கவேண்டும். குழந்தைகள் ஞானஸ்நானத்தில் இந்த உத்தரவாதம் பெற்றோரையும், சபையாரையும் (ஞானப் பெற்றோர்சபையின் பிரதிநிதிகளாவர்) பொருத்தது. அவர்கள், அக்குழந்தை தன்னை மனதார கிறிஸ்துவுக்கு ஒப்புக்கொடுக்கும் காலமளவும், அதைக் கிறிஸ்துவினுடையதாக வளர்ப்போமென வாக்குக் கொடுக்கிறார்கள். பின்னர் திடப்படுத்தலில், அல்லது அதைப்போன்ற ஆராதனையில் ஞானஸ்நானம் முத்திரிக்கப்பட்டு பூரணப்படுத்தப்படுகிறது. இது செய்யப்படுமளவும், சபையின் சிலாக்கியங்களையும், உத்தரவாதங்களையும் பெற்றுக்கொள்ள ஒருவரையும் நாம் அனுமதிக்கிறதில்லை. இவ்வகையில் நாம் பாப்டிஸ்டு சபையார் (Baptist) கொள்கைக்குப் பூரணமாக உடன்படுகிறோம். ஆனால் குழந்தையை ஆரம்ப முதல் உடன்படிக்கையின் ஜனங்களோடு சேர்ந்ததாகவே நடத்தி, அக்குழந்தை படிப்படியாக உடன்படிக்கையின் ஆசீர்வாதங்களைப் பெற்றுக்கொள்ளத்தக்கதாகப் பயிற்றுவிக்கிறோம். குழந்தைப்பருவ முதல் புருஷனாகும்வரையுமுள்ள ஒவ்வோர் கட்டத்திலும் தேவனுடைய அன்புக்கு அவன் பாத்திரனாகத்தக்க தன்மையில் பெருகி வளர ஆத்துமாவுக்கு வேண்டிய உதவியைப் பெற்றோரும் சபையாரும் செய்கின்றனர். ஓர் குழந்தை பகுத்தறிவுபெற்று விசுவாசிக்கத்தக்க பருவமடைந்த பின்னரே ஞானஸ்நானம் கொடுக்க வேண்டுமென்று நாம் காத்திருக்கிறதில்லை. அங்ஙனம் செய்வது கிரமத்தப்பாகும். குழந்தையின் விசுவாசத்தை (இரண்டாவதானதை) முதன்மையாகக்கொண்டு தேவனுடைய கிருபையின் கிரியைக்கு (பிரதானமானதற்கு) இரண்டாம் ஸ்தானம் கொடுப்பது ஒழுங்கல்லவே. தன்னைக் கருத்தாய் ஆராய்ந்து பார்க்கிறகிறிஸ்தவன், தான் ஞானஸ்நானம் பெற்றபோதிலும் தேவனோடுள்ள உடன்படிக்கையை அர்த்தமற்றதாக்கி, தேவனுடைய அன்பைப் பழித்து நடந்த சமயங்களை உணர்ந்து, மனந்திரும்பி வெட்கத்துடன் கெட்டகுமா



ரனைப்போல் தகப்பனுடைய வீட்டுக்குத் திரும்ப வருவானானால், நாம் அவனுக்குத் திரும்ப ஞானஸ்நானம் கொடுக்கிறதில்லை. அவனுக்கு திரும்ப ஞானஸ்நானம் கொடுத்தால் அவன் தன்னை வஞ்சித்துக் கொண்டிருந்ததை உறுதிப்படுத்தினதாகும். அல்லாமலும் அவன் தேவனுடைய கிருபையின் உடன்படிக்கையின் ஜனத்திரளுக்குள் ஞானஸ்நானம் பெற்றான் என்ற நிலையான சத்தியத்தை மறுப்பதுமாகும். அவன் தன் தகப்பன் வீட்டுக்கு அனைதைபோல் சுவீகாரப் புத்திரனாக்கப்படும்படி வராமல், தன் புத்திரபாத்தியதையைச் சில காலம் மறந்துபோயிருந்த மகனாகவே வருகிறான். ஞானஸ்நானத்தில் தேவன் அவனை மகனாக ஏற்றுக்கொண்டதை ஒரேதரம் விளம்பினார். அவன் அதை மறந்துபோனாலும் அவன்பெற்ற ஞானஸ்நானம் என்றும் நிலைநிற்கும்.

இது விஷயத்தை ஆராய்ச்சி செய்த எல்லாக் கிறிஸ்தவர்களும் உண்மையான ஞானஸ்நானம் திரும்பக் கொடுக்கத்தக்கதன்று என ஒப்புக்கொள்ளுகின்றனர். ஞானஸ்நானத்திலுள்ள இந்த அம்சத்தை கலியாணத்திற்கு ஒப்பிடலாம் எங்ஙனம் விவாகம் குடும்ப ஜீவியத்திற்கு ஆரம்பமோ அங்ஙனமே ஞானஸ்நானம் கிறிஸ்தவ ஜீவியத்திற்கு ஆரம்பம். சில சமயங்களில் ஒருவரைப்பற்றியொருவர் ஒன்றும் அறிந்துகொள்ளாத இருவர், கலியாணம் என்றால் என்ன என்றே தெரிந்துகொள்ளாத நிலைமையில் விவாகத்தால் இணைக்கப்பட்டிருக்கலாம். கலியாண வாழ்க்கையில் ஈடுபட்டு சுமார் 10 வருடங்களுக்குப் பின் ஒருவரையொருவர் அறிந்து, விவாக நிலைமையின் மேன்மையை உணரும்போது "நாம் முன் செய்த விவாகம், விவாகமல்ல, நாம் திரும்பவும் விவாகம் செய்துகொள்ளவேண்டும்" என்று சொல்லுவார்களா? ஒருபோதும் சொல்லமாட்டார்கள். ஒரு வேளை அவர்கள் சண்டையிட்டுப் பிரிந்திருந்து, பின்னர் நல்மனம் பொருந்தி கூடிவாழ இசையும்போது தாங்கள் திரும்பவும் கலியாணம் செய்து கொள்ள வேண்டுமென்று சொல்லுவார்களா? அல்லவே அல்ல. கலியாணம் ஒரே தடவைதான். அதுபோலவே ஞானஸ்நானமும் கிறிஸ்துவின் மீட்புக்கும், கிறிஸ்தவ ஜீவியத்தின் ஆரம்பத்திற்கும் ஒரேதரம் ஏற்பட்ட அடையாளமாயிருக்கிறது எனவே ஞானஸ்நானம் திரும்பவும் கொடுக்கத்தக்கதன்று ஒரு வேளை ஒருவன் தான் ஞானஸ்நானம் பெற்றபோது தனக்கு ஒன்றுந்தெரியாது என்று சொன்னாலும் ஞானஸ்நானம் ஞானஸ்நானந்தான். அவன் கிறிஸ்துவைவிட்டு விலகி திரும்ப அவரிடம் வந்தபோதிலும் அவனுக்குத் திரும்பவும் ஞானஸ்நானம் கொடுக்கிறதில்லை குழந்தைப் பிராயத்தில் ஞானஸ்நானம் பெற்ற ஒரு மனிதன் திரும்ப ஞானஸ்நானம் பெற்றால், ஒன்று அவன் முதலாவது பெற்ற ஞானஸ்நானம் ஞானஸ்நானந்தா

னென்ற விசுவாசமற்றிருக்கவேண்டும்; அல்லது, அவன் தான் செய்கிறது இன்னதென்று அறியாதவனுயிருக்க வேண்டும்.

இறுதியாய் இவ்விஷயத்தை மூன்று வாக்கியங்களில் சுருக்கிச் சொல்லலாம் :—

1. கிறிஸ்தவக் குடும்பகளிலுள்ள குழந்தைகளுக்கு நாம் ஞானஸ்நானம் கொடுக்கிறேம்; ஏனெனில், அங்ஙனம் செய்வதால் கிறிஸ்துவும், அப்போஸ்தலரும், ஆதி திருச்சபையும் அளித்த உபதேசங்களுக்கும் அனுஷ்டானங்களுக்கும் நாம் உண்மையுள்ளவர்களாயிருக்கிறேமென்ற விசுவாசம் நமக்குண்டு.

2. நமது உடன் கிறிஸ்தவ சகோதரரான பாப்டிஸ்டு சபையாரின் (Baptist) கொள்கைகளை மதித்து அவர்களோடு அந்நியோன்யமாய் வாழ்ந்து ஐக்கியப்படுவதற்குக் கூடுமான யாவற்றையும்செய்ய விரும்புகிறேம்.

3. தென் இந்திய சபையின் அங்கத்தினர் திரும்பவும் ஞானஸ்நானம் பெறவோ, கொடுக்கவோ நாம் அனுமதிக்கிறதில்லை; ஏனென்றுல் ஞானஸ்நானத்தின் தன்மை அதைத் திரும்பக் கொடுக்கத்தக்கதன்று.

—தேன்னிந்திய சபைப் பிரசுரம்.

---

## சிறுவர் பாகம்

(கனம் தனமணி காபிரியேல் அம்மாள், மதுரை)

உங்களுக்கு ஒரு விடுகதை சொல்லப்போகிறேன் :—

"நான் பலவீனமாய் இருக்கும்போதே பலமுள்ளவனுயிருக்கிறேன்" என்பது.

உங்களில் எத்தனைபேர் இதைச் சரியாய் விடுவிக்க முடியும்? உங்களுக்கு விளங்கக்கூடிய விதமாய் நானே அதை விடுவிக்கப் பிரயாசப்படுகிறேன்.

ஒருநாள் சாயங்காலம் சுமார் ஆறுமணி இருக்கும். ஒரு பெரிய பட்டணத்தில், பட்டணவாசிகளை அங்குமிங்கும் கொண்டு செல்லும் கார் ஓரிடத்தில் வந்து நின்றது. அங்கே காத்துக்கொண்டு நின்ற ஆண்களும் பெண்களும் அதிலே ஏறிக்கொள்ளப் பிரயாசப்பட்டார்கள். ஆனுல் ஆண்கள் அதிக தைரியத்தோடே காரில் முந்தி ஏறி வசதிப்படி உட்கார்ந்துகொண்டார்கள். பெண்களோ



கடைசியாகக். கஷ்டப்பட்டு ஏறினும் உட்கார இடமில்லாமல் மேலே மாட்டப்பட்டிருந்த கம்பத்தையும் தோல் கயறுகளையும் பிடித்து, கார் ஓடுகையில் முன்னும் பின்னும் அசைந்து அசைந்து சங்கடப்பட்டார்கள். அங்கே பலமுள்ளவர்கள் பலமுள்ளவர்களாகவும், பலமில்லாதவர்கள் பலவீனராயும் காணப்பட்டார்கள். கார் சிறிது தூரம் சென்றது. திரும்பவும் ஆட்களை ஏற்றும்படி நிற்கவேண்டிய இடத்தில் நின்றது. அங்கே ஒரு பெண் தனது தோளில் ஒரு நொண்டிப் பிள்ளையைத் தூக்கிக்கொண்டு, தனது கையில் அந்த நொண்டிப்பிள்ளையின் நடைக்காக உபயோகிக்கும் கவைத் தடியைப் பிடித்துக்கொண்டு அந்தக் காரில் ஏறினுள். காரில் இடமில்லாமல் நிறைந்திருப்பதைக் கவனித்துக் "கடவுளே நான் என்ன செய்வேன், நீர் தான் எனக்கும் என் பிள்ளைக்கும் உதவி செய்யவேண்டும்" என்று வேண்டிக்கொண்டாள். இவளைப் பார்த்தவுடனே அங்கே உல்லாசமாய் உட்கார்ந்திருந்த எல்லா ஆண்களும் எழுந்து நின்றுகொண்டு, "இங்கே வா, என்னிடத்தில் உட்கார்ந்துகொள், இங்கே வா, இங்கே வா" என்று தன் தன் இடத்தை அந்த பரிதாபகரமான பெண்ணுக்குக் கொடுக்க ஆசைப்பட்டார்கள். ஏன்?

அந்தப் பெண் ஒரு சாதாரண அந்தஸ்துள்ளவள். மேலும் ஒரு நொண்டிப் பிள்ளையைத்தான் உடையவளாயிருந்தாள். ஆனுல் "அங்கிருந்த அநேகம் பலமுள்ள ஆண்களைப் பார்க்கிலும் அவளும் அவளுடைய நொண்டிப் பிள்ளையும் பலமுள்ளவர்களாயிருந்தார்கள்." "நான் பலவீனமாயிருக்கும்போதே பலமுள்ளவனுய் இருக்கிறேன்."

பரி. பவுல் என்பவருக்குச் சரீரத்திலே ஒரு முள் கொடுக்கப்பட்டிருந்தது என்று வாசிக்கிறேம். அந்த முள் அவருக்குப் பயத்தையும் வேதனையையும் கொடுத்து அவருடைய ஊழியத்திற்குத் தடை செய்துவந்த சரீரநோய்த் தொந்தரவாய் இருக்கலாம். அது என்னவாயிருந்தாலும் அது அவருக்குப் பலவீனத்தை உண்டுபண்ணியது. அதைத் தன்னைவிட்டு நீக்கிப்போடும்படி மூன்று முறை பவுல் இயேசு சுவாமியிடம் வேண்டுதல் செய்தார். "அதற்கு அவர்; என் கிருபை உனக்குப் போதும்; பலவீனத்திலே என் பலம் பூரணமாய் விளங்கும்" என்றுர். அதற்கப்புரம் பவுல் மிகுந்த ஆறுதல் உள்ளவராய், பலவீனம், சோர்வு காணப்படுகையில் கிறிஸ்துவின் வல்லமை தன்னில் தங்கித் தன்னைப் பலப்படுத்துவதைத் தன் சொந்த அனுபவத்தில் கண்டவராய், "கிறிஸ்துவினிமித்தம் எனக்கு வரும் பலவீனங்களிலும், நிந்தைகளிலும், நெருக்கங்களிலும், துன்பங்களிலும், இடுக்கண்களிலும் நான் பிரியப்படுகிறேன்." "அந்தப்படி நான் பலவீனமாயிருக்கும்

போதே பலமுள்ளவனுய் இருக்கிறேன். ஏனென்ருல் கிறிஸ்துவின் வல்லமை என்மேல் தங்கும்படி என் பெலவீனங்களைக் குறித்து நான் மிகவும் சந்தோஷமாய் மேன்மை பாராட்டுவேன்" என்கிருர்.

அந்த ஏழைப் பெண்ணும், அந்தக் கால் இழந்த பிள்ளையும் மிகவும் பலவீனர், உதவியற்றவர். அவர்களுடைய பலவீனத்திலே கிறிஸ்துவின் வல்லமை பூரணமாய் விளங்கினபோது, பலமுள்ளவர்களைப் பார்க்கிலும் பலமுள்ளவர்களாகிருர்கள். சிறுவர்களாகிய நாமும் எத்தனையோ காரியங்களில் பலவீனராய்க் காணப்படுகிருேமல்லவா? வியாதியுண்டு, வறுமை, துன்பம், கவலையுண்டு. மனச்சோர்வடைவது அவசியமில்லை. கிறிஸ்துவின் வல்லமை நமக்கும் அளிக்கப்படும். அதை நாம் நம்பி, தைரியத்தோடே அன்ருடகக் கடமையைச் செய்து வருவோம்.

"அந்தப்படி நான் பலவீனமாயிருக்கும்போதே பலமுள்ளவனுய் இருக்கிறேன்." (II கொரி. 12:10).

---

## சீரோபேனிக்கியா மாது அல்லது விடாமுயற்சியுள்ள ஜெபத்தின் வெற்றி.

(மத். 15:21-29—மார். 7:24-31)

"நீங்கள் புறஜாதியார் நாடுகளுக்குப் போகாமலும், சமாரியர் பட்டணங்களில் பிரவேசியாமலும், காணுமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்துக்குப் போங்கள்" (மத். 10:5, 6) என்று தம் சீடருக்குப் பணித்த இயேசுபெருமான் தாமே, ஓய்வின் காரணமாகப் புறஜாதியார் நாடான சீரோபேனிக்கியாவுக்குச் செல்கின்ருர். அங்கு சீரோபேனிக்கியா நங்கைக்கு விதிவிலக்காக இரக்கமுற்றருள் புரிகின்ருர். இவ்வாறே சமாரியா மங்கைக்கும் ஆசியருளினதும் கவனிக்கத்தக்கது. (யோவா. 4:1-42) பரிசேயரின் பொருமையின் காரணமாகவே ஆண்டவர் யூதேயாவைவிட்டுச் சமாரிய நாட்டின் வழியாகக் கலிலேயா சென்ருர். அப்போதுதான் சமாரியா மங்கையைச் சந்தித்தார். அவ்வாறே பரிசேயரின் பகைமையினிமித்தமே (மார். 7:1-23) இஸ்ரவேலர் நாட்டைவிட்டுத் தீரு சீதோன் பட்டணங்களின் எல்லைகளுக்குப் போனுர். கலிலேயாக் கடலின் கீழ்க்கரையைக் கடந்து சென்ருலும், கலிலேயாவிலேயே தங்கியிருந்தாலும் அவர் எதிர்பார்த்த ஓய்வு கிடைத்திராது. ஆதலால்தான் அவர் கலிலேயாவிற்கு வடமேற்கிலிருந்த பேனிக்கியா நாட்டிற்கேகினுர்.



பேனிக்கியா நாடு ஒரு காலத்தில் உலகிலேயே முதல்தரமான கடல் வாணிகமுடையதாய்த் திகழ்ந்தது. ஆனுல் ஆண்டவர் காலத்தில் உரோமைப் பேரரசுக்குட்பட்ட சீரியா மாகாணத்தின் ஒரு பகுதியாய் விளங்கினது. ஆகையால்தான் சீரோபேனிக்கியா எனப்பட்டது. இந்தப் பழம்பெருமக்களான பேனிக்கியரே ஆங்கில மொழியின் அரிச்சுவடியை வழங்கினவர் என்பது ஆராய்ச்சியாளர் முடிவு. இஸ்ரவேலரால், யோசுவாவின் காலத்தில் அந்நாட்டின் மக்களான கானுனியர் ஜெயிக்கப்பட்டனர். ஆயினும் யோசுவா 13:1லும் 17:12-13லும் கண்டபடி அம்மரபினருள் ஒரு சிலர் அந்நாட்டில் மீந்திருந்தனர் என்பதும் அவர்கள் ஆண்டவர் காலம்வரை அங்கிருந்தனர் என்பதும் புலப்படும். அவர்களை இஸ்ரவேலர் பெரிதும் வெறுத்துப் பகைத்தனர். இதற்குச் சான்றுகள் தீர்க்கதரிசன ஆகமங்களுள் பரக்கக் காணலாம். ஏசா. 23, எரே. 25:22, 27:3, 47:4, எசேக். 27:8, 28:21, 32:30, யோவேல் 3:4, சகரி. 9:2 முதலிய வேதப் பகுதிகளைக் காண்க. அப்படிப்பட்ட பகைவர் நாட்டில் எவரும் தம்மையறியார் என்றும் அதுவே சிறிது ஓய்ந்திருக்கத் தகுதியானது என்றும் கருதியே ஆண்டவர் அங்கு சென்றனர்.

### தீரு சீதோன் நகரங்களின் மாண்பு.

இராகமாலிகை (மாலைப்பொழுதினிலே) ரூபகம்.

**சேஞ்சுருட்டி**

சீரோங்கும் பேனிக்கியா—தேசத்தில்
தீரு சீதோன் நகர்கள்,
பேரோங்கும் ரோமை ஆட்சி—அதன் கீழ்
பெரும்புகழ் படைத்தனவே.

ஆங்கில அரிச்சுவடி—அதனை
அளித்ததும் பேனிக்கியா.
ஓங்கும் கடல் வாணிகம்—அதிலே (ஏசா. 23:2)
உயர்ந்ததும் பேனிக்கியா.

**பியாகு**

கானுன் தேசத்திலே—திகழ்ந்த
கானுனிய மக்களை
மேனுள் இசரவேலர்—ஜெயித்தே
விரட்டியடித்தனரே

சிந்துபைரவி

அம்மரபில் மீந்தவர்—அந்நாளில் (யோசு. 13 : 1, 17 : 12, 13)
அங்கு குடியிருந்தார்.
இம்மியும் விரும்பாது—யூதர்கள்
இவர்களையே வெறுத்தார். (எசா. 23, எசே. 28 : 21)

மோகனம்

பரிசேயரும் ஏரோதுவும்—இயேசுவைப்
பகைத்த காரணத்தால் (மத். 15 : 1-20)
ஒரு சில நாட்கள் அங்கு—ஆண்டவர்
ஓய்ந்திருக்கவே சென்றார். (மார். 7 : 24)

நாதநாமக்கிரியை

நமது நிழல் நமக்கு—முன்னாலே
நடந்திடும் தன்மைபோலே
அமையும் நம் ஆண்டவரின்—புகழே
அவருக்கு முன் சென்றதே. (மார். 7 : 24)

வீ. ஜெயராஜ்.

(தொடரும்)

---

# இயேசுவின் ஜெபப்பள்ளி.

நான்காம் பாடம்.

'ஆதலால் இவ்விதமாய் ஜெபியுங்கள்';

அல்லது

## மாதிரி ஜெபம்.

'ஆதலால், நீங்கள் ஜெபம் செய்யவேண்டிய விதமாவது: பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே' மத். 6 : 9

மாதிரிக்கிருக்கும் வல்லமையைப்பற்றி ஒவ்வொரு ஆசிரியனுக்கும் தெரியும். அவன் மாணவன் எதைச் செய்யவேண்டும்? எப்படிச் செய்யவேண்டும்? என்று சொல்வதோடு நின்றுவிடாது, அது உண்மையில் எவ்வாறு செய்யப்படக்கூடும் என்பதையும் குழந்தைக்குச் செய்தும் காட்டுகிறான். நமது பலவீனத்திற்கிரங்கி நமது



பரம ஆசிரியன், நமது பரம தந்தையிடம் நெருங்கும்போது நாம் எந்த வார்த்தைகளைக்கொண்டு சொல்லவேண்டுமோ அந்த வார்த்தைகளையே நமக்கு அருளியிருக்கின்றார். அவ்வார்த்தைகளில், நித்திய வாழ்வின் அல்லது அமர வாழ்வின் முழுமையையும் புதுமையையும் அருளுகிற ஒரு ஜெபமுறை உண்டு. ஒரு குழந்தையும்கூடச் சொல்லக்கூடிய அளவிற்கு எளியதாகவும், கடவுள் நமக்கருளும் சகல பேறுகளின் முழுப்பரப்பையும் அடக்கிய தெய்வீக சம்பத்தாகவும் அந்த ஜெபம் இருக்கிறது. அதுமட்டுமா? மற்றெல்லா ஜெபங்களுக்கும் அது மாதிரியாகவும் பரவசம் தருவதாகவும் உளது. மேலும் கடவுள் திருச்சமுகத்தின்முன் நமது ஆத்துமாக்களின் ஆழ்ந்த முறையீடுகளாக அமைந்து, நம்மை எப்பொழுதும் அதனண்டை இழுக்கிறது.

'பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே!' இப்போற்றித் திருமொழியினை இரசிப்பதற்கு, பரிசுத்த வேதாகமத்தில் காணப்படும் அடியார்கள் எவருமே கடவுளைத் தமது தந்தை என்றழைக்கத் துணியவில்லை என்பதை நினைவுகூரவேண்டும். திருக்குமாரன் தமது தந்தையே நமக்கும் தந்தை என்பதைக் காட்டவே வந்தார் என்ற அதிசயமான வெளிப்படுத்தலின் மைய நிலையில், இந்தப் போற்றித் திருமொழிகள் சேர்க்கின்றன என்பதை உணர்தல் வேண்டும். பரம தந்தையாகிய கடவுளுக்கு நாம் பிள்ளைகளாகும்படியாக, சாபத்திலிருந்தும் நம்மை மீட்பதாகிய இரக்ஷணிய இரகசியம் அந்த ஜெபத்தில் அடங்கியிருக்கிறது. புதிய பிறப்பிலே பரிசுத்தாவியானவர் புதிய ஜீவன் அருள்வதாகிய புதிய பிறப்பின் இரகசியமும் அதில் உண்டு. விசுவாசத்தின் இரகசியமும் அதில் உண்டு எப்படியெனில், இரக்ஷிப்பானது பூர்த்தியாகுமுன்னரே அல்லது அதனை விளங்கிக்கொள்ளுமுன்னரே, இனி வரப்போகும் அந்த ஆசிமிக்க அனுபவத்திற்கு அடியார்களை ஆயத்தப்படுத்தும் வகையில் அந்த ஜெபம் அடியார்கட்கருளப்பட்டிருக்கிறது. இப்போற்றித் திருமொழிகள் அவற்றின் பின்வரும் முழு ஜெபத்திற்குமே, ஏன் எல்லா ஜெபத்திற்குமே திறவுகோல் வாக்கியமாகும். அதன் ஆழ்ந்த மெய்ப்பொருளை உய்த்துணர ஒருவனது ஆயுள்கால முழுவதும்கூடப் போதாது. அதன் முழுக் கருத்தையும் முற்றுமுணர யுகா யுகங்களாகும். கடவுளின் தந்தை—அன்பு பற்றிய அறிவு முதன்மையும் எளிமையுமானது. அத்துடன் ஜெபப்பள்ளியில் அதுவே முடிவான, உன்னதமான பாடம். உயிருள்ள தேவனோடு கொள்ளும் நேர்முகத்தொடர்பிலும்; அவரோடுகொள்ளும் நேர்முக அன்பின் ஐக்கிய உணர்விலுமே ஜெப வாழ்வு ஆரம்பமாகிறது. பரிசுத்த ஆவியானவரால் வெளிப்படுத்தப்பட்ட, கடவுளின் பிதாத்துவ அறிவில் தான், ஜெபத்தின் வல்லமை வேரூன்றி வளரும் ஒப்பற்ற பரமதந்தை

யின் எல்லையற்ற பட்சத்திலும்; இரக்கத்திலும், பொறுமையிலும், அவர் நமது வேண்டுதலுக்கு அன்புடன் செவிகொடுத்து நமக்கருள் புரிவதிலுமேயே ஜெபவாழ்வின் ஆனந்தம் அமைகிறது.

'உம்முடைய நாமம் பரிசுத்தப்படுவதாக'.

உடனடியாக நம் மனதில் படும் ஒரு விஷயம் இங்கே இருக்கிறது. பொதுவாக நமது ஜெபங்களில் முதலாவது நமது தேவைகளைப்பற்றிப் பேசிய பிறகுதான் நாம் கடவுளுக்கடுத்தவற்றைப் பற்றி வேண்டுதல் செய்கிறோம் ஆனால் ஆண்டவரே முதலாவது கடவுட்கடுத்தவற்றையும் பிறகு நமது தேவைகளையும் வேண்டும் வகையில் ஜெப ஒழுங்கை தலைகீழாக மாற்றியருளியுள்ளார். அவர் தந்துள்ள ஜெப ஒழுங்காவது: முதலாவது உமது நாமம், உமது இராஜியம், உமது சித்தம்; என்கிறார். பிறகுதான் 'எங்களுக்குத் தாரும்'; 'எங்களுக்கு மன்னியும்'. 'எங்களை நடத்தியருளும்', (Lead us) 'எங்களை இரட்சித்துக்கொள்ளும்' என்கிறார். இது ஒரு மாபெரும் போதனை. மெய் வழிபாட்டில் பரமபிதாவிற்கே முதலிடம் தரவேண்டும் பரமபிதாவே எல்லாமாயிருத்தல் வேண்டும். அவரே மகிமைப்படவேண்டும் என்ற ஆசையின் காரணமாக நாம் எவ்வளவுக்கெவ்வளவு நம்மை மறக்கின்றோமோ, அவ்வளவுக்கவ்வளவு நமக்கு ஜெபத்தால் கிடைக்கும் ஆசியின் ஐசுவரியம் பெருகும். பரமதந்தைக்காகத் தியாகம் செய்வதை எவனொருவனும் இழந்துபோக மாட்டான்.

இக் கருத்தே நமது ஜெபங்களில் ஆதிக்கம் செய்யவேண்டும். தனிஜெபம், பரிந்து பேசுதலின் ஜெபம் என்று ஜெபம் இருவகைப்படும். பரிந்து பேசுகிற ஜெபத்திற்காக, சாதாரணமாகச் செலவிடுகிற நேரமும் முயற்சியும் சொற்பமே. இது இப்படியிருத்தல் கூடாது. பரிந்து பேசுகிறவர்களைப் பயிற்றுவிக்கவே இயேசுநாதர் தமது ஜெபப்பள்ளியை நிறுவியிருக்கின்றனர். ஏனெனில் அவரது திருப்பணியின் அன்பின் ஆசிகளை, ஜெபப்பள்ளி மாணவர் தமது ஜெபதவங்களாலும், விசுவாசத்தாலும் உலகில் கொண்டுவர வேண்டிய பொறுப்புடையவராயுள்ளர். இதுவே நமது குறிக்கோளாயிராவிடில் நமது ஜெப வாழ்க்கை உயரிய நிலையை அடையாது. குழந்தையானது முதலாவது தனக்கானவற்றையே தன் தந்தையிடம் கேட்டாலும்கூட, சீக்கிரத்தில் தன் சகோதரிக்கும் கொடுக்கும்படி கேட்கப் பழகுகிறது. ஆனால், தனது தந்தையின் விருப்பங்களுக்காகவே உயிர் வாழ்ந்து, தனது தந்தையின் குடும்பப் பொறுப்பையோ தொழிலையோ ஏற்று நடத்தும் வயதுவந்த குமாரனே அதிகம் கேட்கிறான். கேட்ட யாவற்றையும் பெறுகிறான். பரம பிதாவின் நாமத்திற்கும், அவரது இராஜியத்திற்கும், அவரது திருவுளச்



சித்தத்திற்கும் முதலிடம் கொடுப்பதும், நமது விருப்பங்களை அவற்றிற்குக் கீழாக வைப்பதுமான தூய திருப்பணிக்கே நமது ஆண்டவர் நம்மைப் பயிற்றுவிக்கிறார். எனவே இதற்காகவே நாம் வாழ்வோமாக. பரமதந்தையே என்று சொல்லுகிற அதே மூச்சிலேயே உமது நாமம், உமது இராஜியம் உமது சித்தம் என்ற மூலமந்திரத்தை சதா உச்சரிப்போமாக.

'உம்முடைய நாமம் பரிசுத்தப்படுவதாக' என்ன நாமம்? இப் புதுப்பெயராகிய பிதா என்ற நாமமே. பழைய ஏற்பாட்டின் மைய வார்த்தை பரிசுத்தம் என்பதே. புதிய ஏற்பாட்டின் மைய வார்த்தை, பிதா நாமம் என்பதே. அன்பின் நாமமாகிய இதிலேதான் கடவுளின் சகல பரிசுத்தமும், மகிமையும் இப்போது வெளிப்படுத்தப்பட வேண்டியிருக்கிறது. நாமம் பரிசுத்தப்படுவதெங்ஙனம்? கடவுளாலேயே பரிசுத்தப்படுத்தப்படும். ஏனெனில், 'நீங்கள் பரிசுத்தக் குறைவாக்கிய எனது பெரிய நாமத்தை நானே பரிசுத்தப்படுத்துவேன்' என்று கடவுளே கூறியுள்ளார். நம்மிலும், கடவுளுடைய சகல பிள்ளைகளிலும், உலகரிய, பரிசுத்தத்தையும், தெய்வீக வல்லமையையும், கடவுளுடைய நாமத்தின் அந்தரங்க மகிமையையும் கடவுள் தாமே வெளிப்படுத்தத்தக்கதாக நமது ஜெபம் இருக்கவேண்டும். பரம பிதாவின் ஆவி பரிசுத்த ஆவியே. அவராலேயே நாம் நடத்தப்படும்படி நாம் இசையும்போதுதான் நமது ஜெபங்களிலும் நமது வாழ்க்கைகளிலும் அவரது நாமம் பரிசுத்தப்படும், 'எங்கள் பிதாவே. உம்முடைய நாமம் பரிசுத்தப்படுவதாக' என்ற ஜெபத்தைக் கற்போமாக.

'உம்முடைய இராஜியம் வருவதாக'. பரமபிதா, ஒரு அரசன். அவருக்கு ஒரு இராஜியமும் உண்டு. ஒரு அரசனின் குமாரனும் சுதந்திரவாளியுமாகிய ஒருவனுக்குத் தனது தந்தையின் இராஜியத்தைவிடச் சிறந்த பற்று வேறொன்றுமே கிடையாது. யுத்த காலத்திலும் ஆபத்துக்காலத்திலும், இதுவே அவன் ஆவலும் தாகமுமாகிறது. இதைத்தவிர வேறெதையும் கருதான். பரமபிதாவின் புதல்வர் பகைவன் நாட்டிலிருக்கின்றனர். பரமண்டலத்திலுள்ள பரம இராஜியம் இன்னும் பூரணமாய் வெளிப்படவில்லை. எனவே 'உம்முடைய இராஜியம் வருவதாக' என்று வருந்திக் கதறுவது இயற்கையே. பரம இராஜிய வருகை ஒரு மகா முக்கிய நிகழ்ச்சி. ஏனெனில், பரம பிதாவின் மகிமை வெளிப்படும். அவரது பிள்ளைகளின் ஆசியும், உலகின் இரக்ஷிப்பும் அதனைப்பொறுத்தே இருக்கிறது. நமது ஜெபங்கள் மீதும் கடவுள் இராஜியம் வரக் காத்திருக்கிறது. இதனை இயேசுவின் ஜெபப்பள்ளியில் கற்போமாக.

'உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறது போல பூமியிலேயும் செய்யப்படுவதாக'. இவ்விண்ணப்பத்தின் பிற்பகுதியை

கடவுளுடைய திருச்சித்தத்தைப் புண்படுத்தும் விதத்தில் அடிக்கடி உச்சரிக்கிறோம். பரலோகத்தில் கடவுள் திருச்சித்தம் செய்யப்படுகிறது மெய்யே. பரலோகத்தில் அவரது சித்தம் செய்யப்படுவது போலவே பூமியிலேயும் அவரது சித்தம் செய்யப்படும்படி வேண்டுமாறு ஆண்டவர் போதிக்கிறார். கடவுள் திருச் சித்தமே பரலோகத்தின் மகிமை. ஆதலால், அதனைச் செய்வது பரலோக ஆசியாகிறது. எப்போது அவரது சித்தம் செய்யப்படுகிறதோ அப்போது பரலோக இராஜியம் இருதயத்தில் பிரவேசிக்கிறது; பரம தந்தையின் அன்பினை எவ்வெப்போது விசுவாசமானது ஒப்புக்கொள்ளுகிறதோ, அவ்வப்போது கீழ்படிதலானது பரமதந்தையின் திருச் சித்தத்தை ஒப்புக்கொள்ளுகிறது. தற்பிரதிஷ்டையும், பரலோகம் அவரது சித்தத்திற்குக் கீழ்ப்படிவதுபோல கீழ்படிதலுள்ள வாழ்க்கைக்காக வேண்டும் ஜெபமுமே சிறுபிள்ளையின் ஆவியை ஒத்ததாகும்.

'எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை இன்று எங்களுக்குத் தாரும்'

பரமதந்தையின் நாமத்தையும், அவரது இராஜியத்தையும், அவரது சித்தத்தையும் பற்றிக் கவலையெடுக்க நாம் இணங்கும்போது, நமது அன்றாட உணவிற்காக கேட்கும் முழு உரிமை நமக்குண்டு. ஒரு எஜமான் தன் சேவகனுடைய உணவைப்பற்றியும் ஒரு சேனைத் தலைவன் தன் போர்வீரர் உணவைப்பற்றியும், ஒரு தகப்பன் தன் குழந்தையின் உணவைப்பற்றியும் கவலை எடுப்பது கண்கூடு. தனது ஜெபத்தின் மூலம் அவரது காரியங்களைப்பற்றி அக்கறை கொள்ளும் அடியானின் உணவைப்பற்றிப் பரமதந்தை கவலையெடாதிருப்பாரா? 'பரமதந்தையே! நான் உமது மகிமைக்காக, உமது திருத்தொண்டிற்காக உயிர் வாழ்கிறேன். எளியேனைப்பற்றி நீர் கவலை எடுக்கிறீர் என்பதை நான் அறிவேன்' என்று நாம் முழு நம்பிக்கையோடு கூறலாம். கடவுளுக்கு நம்மை ஒப்படைப்பதும், அவரது திருவுள்ளச் சித்தமும் அநித்திய காரியங்களுக்காக வேண்டுதல் செய்யும் அதிசயமான உரிமையை நமக்கருளுகின்றன. பரமதந்தையின் அன்பினுக்கே நமது உலக வாழ்வினைத்தையும் ஒப்படைக்கப்படுகிறது.

'எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறதுபோல எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னியும்.' உடலுக்குணவு எப்படியோ அப்படியே ஆத்துமாவிற்கு மன்னிப்பும். உடலுக்குணவு கொடுக்கப்படின் ஆத்துமாவுக்கும் உணவு அருளப்படுவது உறுதி. நாம் கடவுளின் பிள்ளைகள். அத்துடன் நாம் பாவிகள். நமது மன்னிப்பைப் பெற்ற விலைமதிக்க முடியாத இரத்தத்தின் பொருட்டே பரமபிதாவின் சந்நிதானத்தை அடுக்க அருகதை படைத்திருக்கின்றோம்—ஆதலால் மன்னிப்பிற்காக வேண்டும் நமது ஜெபமானது பாவ உணர்ச்சியற்ற வெறும் சொற் கூட்டமாயிராதபடி ஜாக்கிரதையாயிருப்போமாக. மெய்ம்மனத்தாபப்பட்டு அறிக்கையிடுவதே மன்



னிப்பைப் பெறும் என்றுணர்வோமாக. வாக்குத்தத்தம் செய்யப்பட்டபடியே விசுவாசத்தோடு மன்னிப்பைப் பெறுவோமாக. அதுவே ஆவிக்குரிய மெய்ப்பொருள். அதுவே கடவுளுக்கும் நமக்கும் இடையே நடைபெறும் உண்மையான தொடர்பு. அதுவே கடவுளின் அன்பிற்கும் பிள்ளைகளின் சிலாக்கியங்களுக்கும் ஏற்பட்ட திறப்பு. பிறரை மன்னிக்கும் சிந்தையில்லாது போமாயின் அத்தகைய மன்னிப்பை உயிருள்ள வெளிப்பாடாகக் கொள்வது அசாத்தியம். பரம மன்னிப்பைப் பெறுவது பரலோகத்தொடர்பாவது போல பிறரை மன்னிப்பது கடவுள் அடியாரின் பூலோகத்தொடர்பாகிறது. அத்தகைய ஜெபத்தை நாம் பரமபிதாவை நோக்கி உச்சரிக்கும் போது, நம்மால் மனதார நேசிக்கப்படாதவர் எவருமே இல்லை என்று சொல்லும் நிலையில் நாமிருக்கவேண்டும்.

'எங்களைச் சோதனைக்குட்படப் பண்ணாமல், தீமையினின்று எங்களை இரட்சித்துக்கொள்ளும்' அன்றாட ஆகாரத்தைப் பெறுவதும், நமது பாவங்கள் மன்னிக்கப்படுவதும், பாவங்களினின்றும் தீமையினின்றும் நாம் காக்கப்படுவதுமாகிய இந்த மூன்று விண்ணப்பங்களிலே நமக்கு வேண்டிய தேவைகள் யாவும் அடங்கியுள. ஆகாரத்திற்கும், மன்னிப்புக்கும் செய்யப்படும் ஜெபமானது பரமபிதாவின் திருவுள்ளச் சித்தத்தின்படி எல்லாவற்றிலும் கீழ்ப்படிந்து வாழ நம்மையே அர்ப்பணம் செய்வதையும், நமக்குள்ளிருந்து நம்மீது ஆதிக்கம் செலுத்தித் தீமையினின்றும் இரக்ஷிக்கும் ஆவியின் வல்லமையாலருளப்படும் விசுவாச ஜெபத்தையும் கொண்டதாயிருக்க வேண்டும்.

கடவுளின் பிள்ளைகளே! இவ்விதமாகவே நாம் ஜெபிக்குமாறு இயேசுநாதர் விரும்புகிறார். அவரது நாமமும் அவரது இராஜியமும் அவரது திருவுளச் சித்தமும் நமது அன்பில் முதலிடம் பெறட்டும். அவர் போஷணையும், அவர் மன்னிப்பும், அவர் அன்பின் சித்தமும் நமது உடைமைகள். இவ்விதமான ஜெபத்தில் அவர் செடியும், நாம் கொடியுமாக, அவர் உயிரும் நாம் உடலுமாக, அவர் பாவும் நாம் ஊடுமாக, அவர் நிலமும் நாம் பயிருமாக ஒன்றுபடுவதன்மூலம் உமது எங்கள் என்ற இரண்டும் ஒரே பொருளாக நிலைக்கும் என்பது மலைமேல் விளக்கு. அத்தகைய ஜெபம் சிறிதும் சந்தேகமின்றி ஐக்கியமும் பரஸ்பர அன்புமாயமையும். ஜெபத்தைத் துவக்கிறவர் மட்டுமல்ல, முடிக்கிறவருமாகிய அவரை விசுவாசிக்கவும் வழிபடவும் அது நடத்தும். 'ஏனெனில் இராஜியமும், வல்லமையும், மகிமையும் என்றென்றைக்கும் உம்முடையவைகளே, 'ஆமேன்.'

திருச்சுதரே! எங்களுக்கு ஜெபிக்கப் போதித்தருளும் 'எங்கள் பிதாவே.'

---

# தென்னிந்திய சபையின் நான்காவது ஸினடு

(பத்திராதிபர்)

தென்னிந்திய திருச்சபையின் நான்காவது ஸினடு மகாசபைக் கூட்டம் இவ்வருடம் ஜனுவரி 12–15உ வரை சென்னையிலுள்ள மெஸ்றன் போதனுமுறைப் பயிற்சி கல்லூரியில் நடை பெற்றது. அதில் 14 அத்தியக்ஷாதீனத்தின் அத்தியக்ஷர்களும், பிரதிநிதிகளும் சகோதரமிஷன் பிரதிநிதிகளும் பார்வையாளர்களும் சமூகமாயிருந்தனர்.

ஸினடின் மாடறேற்றரும் சென்னை அத்தியக்ஷருமான மகா கனம் ஹாலிஸ் அவர்கள் தலைமையின்கீழ் கூட்டங்கள் துவங்கின. தலைவர் தமது தலைமையுரையில் தாம் தமது தலைமை பதவியிலிருந்து விலக விரும்புவதாகவும், காலத்திற்கேற்றவாறு ஓர் சுதேசி தலைமைப் பதவி வகிப்பது ஏற்றதெனக் கூற, ராயலசீமாவின் அத்தியக்ஷர் மகா கனம் சுமித்திரா அவர்களை மாடறேற்றராகவும், மதுரை இராமநாதபுரம் அத்தியக்ஷர் மகா கனம் நியூபிகின் அவர்களை உதவி மாடறேற்றராகவும் தெரிந்தெடுத்தனர்.

பின்னர் அத்தியக்ஷர்களின் அனுமதியின்றி சபைக் கமிற்றிகள் சர்க்கார் நியாயஸ்தலங்களுக்கு வழக்குகளைக் கொண்டு போகக் கூடாதென்று தீர்மானித்தனர். அத்தியக்ஷர்களின் பதவி நீங்கும் வயதை 65 ஆகவும் அவசியத்திற்கேற்றவாறு 70 வரை நீடிக்க தீர்மானம் செய்யப்பட்டது.

ஸ்ரீமான் ஆர். டி. பால் அவர்கள் மறுபடியும் காரியதரிசியாகவும், ஸ்ரீமான் ஏ. குணமணி அவர்கள், கனம் அகஸ்டஸ் அவர்களுக்கு பதிலாக பொக்கிஷதாராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

1951–1953 முடிய உள்ள காலத்திய அறிக்கை காரியதரிசியால் சமர்ப்பிக்கப்பட்டது. பஞ்சத்தினுல் சபைகளில் ஏற்பட்ட கஷ்டங்களையும், மேற்கத்திய நாட்டுச் சபைகளின் தாராள சிந்தையையும், அவர் குறிப்பிட்டார்.

தாய்ச் சபைகளிலிருந்தும், சகோதர சபைகளிலிருந்தும் வாழ்த்துச் செய்திகள் பல வந்திருந்தன. தென்னிந்திய சபையின் முன்னேற்றத்தை அதிக கவனத்தோடு கவனிப்பதாயும், அதன் முன்னேற்றத்தை அதிகமாய் ஆசிப்பதாயும், தாங்களும் இவ்வித பெரிய ஐக்கியத்தில் ஈடுபடும் காலத்தை எதிர்பார்ப்பதாயும் பலர் கூறினர். தாய்ச் சங்கங்கள் தங்கள் குழந்தைகளான இவ்வைக்கியத்தில் ஈடுபட்ட சபைகளின் முன்னேற்றத்தில் திருப்தி தெரிவித்தனர்.



டாக்டர் லெபீவர், லண்டன் மிஷன் சார்பாக பேசியபோது ஏப்ரல் மாதத்தோடு தென்னிந்தியாவில் நடக்கும் அச்சங்கத்தின் எல்லா வேலைகளும் தென்னிந்திய சபையின் பொறுப்பில் விடப்படுமெனத் தெரிவித்தார். சங்கை பார்ட்ரிட்ஜ் ஐயர் ஆங்கிலசபை மேற்றிராணியார் சார்பாகப் பேசியபோது, ஆங்கிலத் திருச்சபைக்கும், தென்னிந்திய சபைக்கும் உள்ள பாந்துவத்தைக் குறித்து திருப்தி தெரிவித்தார். மார்தோமா சீரிய சபையின் வேதசாஸ்திர ஆராய்ச்சிக் கழகத்தார் தென்னிந்திய சபையோடு பரிசுத்த நற்கருணையில் பங்கு கொள்ளத் தடையில்லை என அறிவித்தனர்.

"இந்தியாவில் சுவிசேஷப் பிரபல்லியத்திற்கு மாதிரி", என்பதே மகா நாட்டின் முக்கிய பொருள். இதைப்பற்றி சங்கை செல்லப்பா ஐயரும், மெடாக் அத்தியக்ஷர் மாகா கனம் உவிட்டேக்கர் அவர்களும் 'குருத்துவம்' பற்றி, மதுரை இராமநாதபுரம் அத்தியக்ஷர் மகா கனம் லெஸ்லிநியூபிகின் அவர்களும் 'சுயேட்சை ஊழியர்' பற்றி சங்கை தேவப்பிரகாசம் ஐயரும், 'அந்நிய நாட்டுப் பண உதவி' பற்றி மகா கனம் சுமித்திரா அத்தியக்ஷரும், 'அந்நிய நாட்டு ஊழியர்' பற்றி ஸ்ரீமான் பால் அவர்களும் பேசினர். தகுந்த ஆலோசனையின்பேரில் சுதேச சபை அதிகமாக அன்னிய நாட்டு பண உதவியையோ, ஊழியரையோ, முறைகளையோ, சார்ந்திராது, நமது நாட்டுக்கேற்றதும், சொந்தமானதுமான சிறந்தமுறைகளையும், சுயேட்சை ஊழியர்களையும் கண்டுபிடித்து பின்பற்ற வேண்டும் என்றும் அதை நான்கு வருட காலத்திற்கு பரீட்சார்த்தமாக செய்து பார்க்கவேண்டுமெனவும் ஓர் தீர்மானம் நிறைவேறியது.

சங்கை செல்லப்பா ஐயரவர்களால் அன்று சாயங்காலம் வந்திருந்த பிரதிநிகளுக்கு ஓர் வரவேற்புப் பொதுக்கூட்டம் நடத்தப்பட்டது. ஓர் மிஷனெரிக் கூட்டமும் நடந்தது. அதில் யாப்புவாவில் செய்யப்படும் ஊழியத்தைப்பற்றி பேசி அவ்வூழியத்திற்கு நம்யாவரின் உதவியும் ஆதரவும் மிகத்தேவை என்று கூறப்பட்டது.

டீக்கன் பதவிபற்றி அது குருபதவிக்கு முந்தின ஓர் நிலையா அல்லது அது ஓர் தனியானதும் நிலைவரமானதுமான பதவியா என்ற கேள்விபற்றி தர்க்கம் செய்யப்பட்டது. பலதுறையில் உள்ளவர்கள் இதில் சேர்ந்து சபையில் சுயேட்சையாக ஊழியம் செய்யலாமா என்ற கேள்வி யோசிக்கப்பட்டது. இதில் அடங்கிய வேத சாஸ்திர நூட்பங்களினிமித்தம் மறு பரிசீலனைக்கு இதை ஓர் கமிற்றியிடம் ஒப்புவிக்கத் தீர்மானம் செய்யப்பட்டது.

லேமென்கள் சபைக்குச் செய்யவேண்டிய ஊழியத்தை, சபை உத்தியோக தன்மையில் மாத்திரம் அல்ல தங்கள் தங்கள் தொழில்களில் இருந்துகொண்டே செய்ய ஏதுவுண்டு எனவும், ஒவ்வொரு

கிறிஸ்தவனும், ஓர் ஆசாரியன், அனுப்பப்பட்ட சுவிசேஷகன் என்பதை மறக்கக்கூடாது எனவும் வற்புறுத்தப்பட்டது. மாடரேற்றர் அவர்கள் ஆங்கிலேயத் திருச்சபைக்கும், தென்னிந்திய திருச்சபைக்கும் இடையே உள்ள நிலை முன்னேறி வருவதாகக் கூறினர். அயர்லாந்தில் கூடிய பொது சினடு தனது கூட்டத்தில் அயர்லாந்து சபையைச் சேர்ந்த குருக்களோ மற்றவர்களோ தென்னிந்தியாவிற்கு வந்து தென்னிந்திய சபையின் ஊழியத்திலோ, தொழுகையிலோ பங்கெடுப்பதில் தடையில்லையென அறிவித்திருக்கிறது எனக் கூறினர்.

பெண்களின் ஐக்கிய காரியதரிசியாக இருந்துவந்த பீக்கனஸ்கிரகாம் அம்மையார் ஓய்வு எடுத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டனர். அவர்கள் ஸ்தானத்திற்கு தென் திருவாங்கூரைச் சேர்ந்த சகோதரி பியாற்றிரிஸ் டானியேல் அம்மையார் நியமிக்கப்பட்டனர். அவர்கள் மேல் நாட்டுப் பண உதவியில் இப்போது இங்கிலாந்தில் இதற்கேற்ற பயிற்சி அடைந்து வருகிறார்கள். இச்சங்கத்தின் புதிய தலைவர், உபதலைவர் பொக்கிஷதார் யாவரும் இந்தியரே. தற்போது 50 சகோதரிகள் இவ்வைக்கிய சங்கத்தில் உழைப்பதாயும் அதில் 3ல் 2 பங்குப் பேர் இந்திய சகோதரிகள் என்றும் அவ்வறிக்கை கூறிற்று.

தற்சமயம் சுமார் 800 குருக்கள் தென்னிந்திய சபையில் உளர் என்றும் அவர்களில் சுமார் நூறுபேர் தற்போது புதிதாக குரு அபிஷேகம் பெற்றவர்கள் எனவும், மொத்தத்தில் பாதிக்கு மேலானவர்கள் அத்தியக்ஷர்களால் குரு அபிஷேகம் பெற்றவர்கள் என்றும் கூறப்பட்டது.

தினசரி வேதவாசிப்பு, ஓய்வு நாட்கள், விசேஷித்த நாட்களுக்குரிய பாடங்கள், ஜெபங்கள் முகவுரைகள்பற்றியும் ஆலோசனைகள் செய்யப்பட்டு, அவைகளை நடைமுறையில் இஷ்ட பயிற்சிக்கு விட்டுப் பார்க்க முடிவு செய்யப்பட்டது. தென்னிந்திய சபையின் புதிய ஆராதனை ஒழுங்கு கூடிய சீக்கிரம் ஆயத்தமாகும். எங்கெங்கு விருப்பமோ அங்கே அதை உபயோகிக்க உத்திரவு கொடுக்கப்பட்டது.

ஆராதனை ஒழுங்குக் கமிற்றி ஞானஸ்நான முறையை எழுதவும், திடப்படுத்தல் முறையை புதிப்பிக்கவும், சந்தர்ப்பங்களுக்கேற்ற வேத வாக்கியங்களைக் குறிக்கவும், அவைகளை பிரதேச பாஷைகளில் மொழிபெயர்க்கவும் அனுமதிக்கப்பட்டது. குருமார் இல்லாத இடங்களில் சில மாறுதல்களுடன் ஜெப ஒழுங்குகளை மற்றவர்கள் கையாடத்தக்க விதமாய் ஒழுங்கு செய்யக் கேட்டுக் கொள்ளப்பட்டது. சாயங்காலம் ஓர் பொதுக்கூட்டம் மாட



ரேற்றர் தலைமையில் நடந்தது. கடந்த 6 வருட காலத்தில் தென்னிந்திய சபை என்ன சாதித்தது என்று கூறப்பட்டது. தென்னிந்திய சபை ஓர் சுயாதீன சபை. ஐக்கியத்திற்கு வழிகாட்டிய சபை. ஆக உலகத்தில் உள்ள மற்ற சபைகளின் கண்கள் இதன் முன்னேற்றத்தையே நோக்கியிருக்கின்றன என்று கூறப்பட்டது.

பெங்களூர் ஐக்கிய வேத கல்லூரியைச் சேர்ந்த திரு J. ரசல் ஐயர், சபையின் சமுதாயக் கொள்கைகளைப்பற்றி பேசுகையில் தனி ஆத்துமாக்களின் இரட்சிப்பைமட்டும் கருதாமல் சமுதாயத்தின் இரட்சிப்பையும் கருதவேண்டும் என்று கூறினர் ஆகவே கிறிஸ்தவ சமூகமாக மற்ற சீர்திருத்த சங்கங்களோடும், சமூகங்களோடும் ஒத்துழைத்து சீர்திருத்த வேலைகளில் ஈடுபடவேண்டும். திருச்சபை நீதி, நியாயத்தை மாத்திரம் கருதி இவ்வூழியத்தில் ஈடுபடாது, அன்பினுல் ஏவப்பட்டு மனிதனின் முழுபாகமான சரீரம், மனம், ஆத்தும நன்மைகளிலும் கவலைகொள்ளல் வேண்டும் என்றார்.

பல அறிக்கைகள் வாசிக்கப்பட்டன. சங்கத்தின் ஆங்கில பத்திரிகையின் பத்திராதிபராக மறுமுறையும் சங்கை செல்லப்பா ஐயரையே நியமித்தனர்.

அந்நியநாட்டு பண உதவியைத் தொடர்ந்து வாங்கினுலும், இங்கு நடக்கும் வேலைகளுக்கு சபை மிகுதியாக தன்னையே நம்பியிருக்கவேண்டும் என்றும், சில தாய் சபைகள் ஏதோ காரணத்தால் பணம் அனுப்புவதை நிறுத்த நேரிடினும் அதற்காக நன்றி தெரிவிக்கக்கூடிய நிலையில் இருத்தல்வேண்டும் என்று கூறப்பட்டது.

விவாகப் பிரச்சினைகள் குறித்த கமிற்றியின் அறிக்கை ஒப்புக் கொள்ளப்பட்டது. அதில் முக்கியமாக தம்பதிகள் ஒருவரை ஒருவர் தள்ளிவிடுதல், கலியாணம் செய்வதில் விலக்கப்பட்ட இன சம்பந்தங்கள், குடும்பங்களை கட்டதிட்டமிடுதல்போன்ற பிரச்சனைகளுக்கு முக்கிய கவனம் செலுத்தப்பட்டது.

இராஜ்யங்கள் விஷயத்திலும், வாலிபர் இயக்கம் போன்ற மிஷனரி ஊழியங்களிலும் N. C. C. கமிற்றியின் தீர்மானத்தை ஆதரிக்க முடிவு விசேஷமாக வாலிபர் இயக்கம்போன்றதைத் தனித்தனி அத்தியக்ஷாதீன பிரச்சனையாக நடத்தத் தீர்மானம். தென்னிந்திய சபை, ஆகஸ்ட் மாதத்தில் அமெரிக்காவில் இவான்ஸ்றன் பட்டினத்தில் நடக்கவிருக்கும் உலக திருச்சபை மகாநாட்டில் பிரதிநிதி ஸ்தானம் பெறும்.

வேதசாஸ்திர கமிஷன் அறிக்கையில் லூதரன் சபையோடு ஐக்கியம் ஏற்படுவதில் முன்னேற்றம் அறிவிக்கப்பட்டது. அது

பற்றிய மூன்றும் வெளியீடு சீக்கிரம் வெளிவரும் என்றும் அறிவிக்கப்பட்டது.

பாப்டிஸ்டு சபையோடு ஐக்கியப்படுவதில் அச்சபையின் சார்பில் பேசக்கூடிய பிரதிநிதிகள் அதிகாரப் பூர்வமாய் நியமுகம் பெருததால் பேச்சு வார்த்தைகள் சற்று நிறுத்தப்பட்டிருக்கின்றன.

சபை அங்கத்துவத்தின் நிபந்தனை, சபை ஆதரிப்புக்கு பணம் கொடுப்பதுமட்டுமல்ல, வயதுமட்டுமல்ல, அதோடுகூட அவர்களின் குணசீலமும், நடத்தையும் சிறந்ததாயிருக்கவேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது.

அமெரிக்காவிலுள்ள ஆங்கில திருச்சபையிடமிருந்து மேல் படிப்புக்காக அந்நியநாடு செல்வதுபற்றிய திரவிய சகாயத்தைக் குறித்து சில சட்டதிட்டங்கள் இயற்றப்பட்டன.

1956ல் நடக்கவிருக்கும் மகாநாடு திருச்சியில் நடைபெற வேண்டுமென்று அந்த அத்தியக்ஷாதீனத்தார் விடுத்த அழைப்பு ஒப்புக்கொள்ளப்பட்டது.

ஐக்கியத்தின் வளர்ச்சியும், சுவிசேஷ ஊழிய வாஞ்சையும், ஆத்திரமும், புதுகாரியங்களை அப்பியசித்தலில் பூரண சுதந்திரமும், சுதேசத் தலைவர்களை ஊக்கப்படுத்துவதிலும், ஊழியத்தில் சுயநாட்டு முறைகளை அனுசரிப்பதிலும் வளர்ச்சிகாணப்பட்டதென்று இக் கூட்டங்கள் தெளிவுபடுத்தின.

மகாகனம் ஹாலிஸ் அத்தியக்ஷரின் சேவையை பெரிதும் பாராட்டிப்பேசி அவருக்கு ஓர் பழைய ஏற்பாடு புத்தகமும் அங்கத்தினர்களின் கையெழுத்துகள் அடங்கிய ஓர் நகலும் அன்பளிப்பாக கொடுக்கப்பட்டது. அத்தியக்ஷருக்கும், அவரது பாரியாருக்கும் மலர்மாலை சூட்டப்பட்டது. பலத்த கரகோஷங்களுக்கிடையே அத்தியக்ஷர் எழுந்து தமது நன்றியைத் தெரிவித்துக் கூறியதாவது :—தாம் இந்தியாவுக்கு வந்து, இவ்வித உன்னத ஊழியத்தைச் செய்யவும், கிறிஸ்தவ சத்தியங்களை இங்குள்ள ஐக்கியத்தின் மூலம் கற்றுக் கொள்ளவும் கிடைத்தது ஓர் பெரும் சிலாக்கியம் என்றும், தான் செய்த எல்லாக் கைங்கிரியங்களிலும் மற்றயாவரும் ஐக்கியமாகவும், பொருமையாகவும் உதவினதற்காகவும், தாம் சென்ற இடங்களி லெல்லாம் தமக்கும் அம்மாளுக்கும் காட்டிய பேரன்பிற்காகவும் நன்றி தெரிவித்தார்.

---

## மதிப்புரை.

“அவரில் இருந்த வெளிச்சம்” என்ற தலைப்புடைய புஸ்தகம் வேதப்பாடசாலையில் இருக்கிறது. இதை ஆங்கிலத்தில் எழுதியவர் கனம் எவ். எல். பிரேய்ன் என்பவர். இவர் சர்க்காரில் உயர்ந்த உத்தியோகம் வகித்தவர். ஆனல் நல்ல கிறிஸ்தவன். கிராம மக்கள் மேய்ப்பனில்லா ஆடுகளைப் போலிருந்ததை இவர் கண்டார். அவர்கள் கல்வி, சுகாதாரம், தேசபக்தி, கடவுள்பக்தி முதலியவற்றில் முன்னேற்றமடைய வேண்டுமென்று ஆவல் கொண்டார். அதற்கான முயற்சியும் எடுத்துப் பலதுறைகளில் வெற்றி கண்டார். தன் அனுபவம் முழுவதையும் புஸ்தக ரூபமாக எழுதினர்.

இதன் முக்கியத்தைக் கவனித்த ஆக்ஸ்பர்ட் யூனிவர்ஸிடி ப்ரெஸ் சங்கத்தார் இதைத்தமிழில் வெளியிட்டனர். மொழி பெயர்த்தவர் அனுபவம் வாய்ந்த கனம் ஜி. வி. யோபு அவர்கள். கிராம முன்னேற்றத்திற்கான சகல விஷயங்களும் எளிய நடையில், நாம் அனுபவத்திற்குக் கொண்டுவரக்கூடிய வகையில், எழுதப்பட்டிருக்கிறது.

அத்தியட்சாதீன இலக்கியக் குழுவினர் இந்தப் புஸ்தகம் நம் ஊழியருக்கு மிகப்பிரயோஜனமானதென்று ஆயிரத்துக்கு மேலான பிரதிகளை விலைக்கு வாங்கி வைத்திருக்கின்றனர். இதன் விலை ரூ 1-2-0. ஆனல் யாவரும் எளிதில் வாங்கும்படி அது 8 அணவிற்கு விற்கப்படும். 25 காப்பிகள் வாங்குகிறவர்களுக்கு 6 அண வீதம் விற்கப்படும் வேண்டியவர்கள் பசுமலை வேதபாடசாலைத் தலைவருக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளவேண்டுகிறோம்.

(ப....ர்).

---

# விளம்பரம்

## மருத்துவ பயிற்சி அப்பிளிக்கேஷன்

ஒவ்வொரு வருஷமும், மார்ச், ஏப்ரல் மாதங்களில் மாத்திரம் பெற்றுக்கொள்ளப்படும். தமிழில் சொந்த கையெழுத்தாக, வயது, பாஸ்பண்ணின வகுப்பு எழுதி நாலணு ஸ்டாம்புகளுடன் கீழ்கண்ட விலாசத்திற்கு அனுப்பவேண்டும் :—

Nursing Superintendent,
St. Martin's Hospital, Ramnad.

---

# விளம்பரம்

அடியிற்கண்ட (audio-Visual) பிரச்சாரத்துக்குரிய சாமான்கள் பசுமலை வேதசாஸ்திர பாட்சாலையில் இருக்கின்றன. அவை யாவையும் மதுரை-ராமநாதபுரம் அத்தியட்சாதீன ஊழியர்களுக்கு உபயோகிக்கபடலாமென்று தெரிவிக்கிறோம். அவைகள் பின் வருமாறு :—

1. சினிமா யந்திரம் (ஒன்று)
2. டாக்கீஸ் சம்பந்தமான யந்திரம் (ஒன்று)
3. சினிமா பிலிம் படங்கள் (சுமார் 8)
4. ஒலிபெருக்கி (Loud-Speaker) (ஒன்று)
5. அசையாத படம் காட்டும் சின்ன யந்திரம் (ஒன்று)
6. அதற்குரிய சிலேடுகள் (சுமார் 6 சின்ன பெட்டி)
7. அதற்குரிய பிலிம் படங்கள் சுமார் 12
8. சுகாதாரத்தைப்பற்றிய பெரிய சார்ட்டுகள் சுமார் 100
9. தொற்று நோய் சுகாதாரம் முதலிய விஷயங்களைக் குறித்து ஏராளமான பிரச்சார பிரதிகள் உண்டு.

மேலே குறிக்கப்பட்ட உபகரணங்களில் உள்ள யந்திரங்கள் யாவும் மின்சாரமிருந்தால் மட்டும் உபயோகிக்கப்படலாம். அது மாத்திரமல்ல, மிகுதியானவை இப்பொழுது பழுது பார்க்கப்பட்டு வருகின்றன,— இந்த யந்திரங்களையாவது மற்றுமுள்ள உபகரணங்களையாவது யாராவது எடுத்து உபயோகிக்க விரும்பினால் அவர்கள் பசுமலை சங்கை இ. இ. உவைட் ஐயருக்கு எழுதி விசாரிக்கும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்

ரிப்பேரான யந்திரங்கள் ஆயத்தமானவுடன் இந்த பத்திரிகையின் மூலம் அறிவிக்கப்படும்.

சாதாரணமாக குறைந்தது 10 நாள் நோட்டீஸ் ஐயரவர்களுக்குக் கொடுக்கப்படவேண்டும்.

---

Lenox Press, Pasumalai 9--2--'54. 423 c.

